# மின்னல்

"தள்ளி உட்காரும், அய்யா!"

"தள்ளி உட்காராமல் இப்பொ என்ன உமது தலையிலா உட்கார்ந்திருக்கிறேன்?"

"தள்ளி உட்காரச்சொன்னால் எதுக்கு ஐயா கத்துகிறீர்? இவ்வளவு ரோசம் உள்ளவர் சொந்த பிளஷரில் போகணும்"

"ஏன், நீர் சொந்தப் பிளஷரில் போகிறதுதானே?"

"உஸ்; அப்பப்பப்பா!"

"என்ன புழுக்கம்; என்ன வேக்காடு!"

"இந்த பஸ் இப்போதைக்கு நகராது."

"இந்தப் பிரயாணம் ஜன்மத்துக்கும் போதும்!"

"ஷ்! ராமா, ராகவா, என் அப்பனே"

பஸ்ஸின் உள்ளே இருந்தவர்கள் வெந்து மடிந்து கொண்டிருந்தனர்.

அந்த பஸ்ஸில் நாற்பத்தைந்து பிரயாணிகள் இருந்தனர். நாற்பத் திரண்டு ஆண்கள்; மூன்று கிழவிகள்.

பஸ்ஸ்டாண்டில் மர நிழல் இருந்தது. பஸ்ஸை நிறுத்துவதற்கென்றே போட்டிருந்த கொட்டகையும் இருந்தது;

அங்கெல்லாம் பஸ்ஸை நிறுத்தியிருக்கலாம். ஆனால் எதற்காக அப்படி நிறுத்தவேண்டும்? நிறுத்தவேண்டுமென்று என்ன ஆத்திரம்?

உட்கார்ந்த பிரயாணிகளில் ஒரு தடியான ஆசாமி, பாவம்! 'கேஸ் பூஸ்' என்று மூச்சு வாங்கி இளைத்துக் கொண்டிருந்தார்; ஆஸ்துமா காரணமாகவோ, அல்லது திட்டம் இல்லாமல் தின்று கொழுத்து விட்டதனாலோ, யாருக்குத் தெரியும்?

ஒரு போலீஸ்காரர், துப்பாக்கியைத் தோளில் சாத்திக்கொண்டு, பெரிய சட்டிவடிவமுள்ள தம் முகத்தை அஷ்டகோணலாக வைத்துக் கொண்டு தூங்கி வழிந்து கொண்டிருந்தார். கேலிச் சித்திரக்காரன், எவனாவது அப்போது அவரைக் கண்டிருந்தால் விடவேமாட்டான்.

இன்னொருவர் பல் டாக்டர், வாரம் ஒரு தடவை அந்த ஊருக்கு வந்து போவார். ஒரு காலத்தில் அவர் முகம் பார்ப்பதற்கு எவ்வளவு அழகாக இருக்கும்! இப்பொழுது அவருக்கு நல்ல வரும்படி. நோயாளி களின் ஊத்தை நிறைந்த பற்களைப் பார்த்துப் பார்த்து, துர்வாடை யையும் அனுபவித்து அவருடைய முகத்தில் அருவருப்புத் தங்கி, அதுவே நிரந்தரமாகிவிட்டது.

அவருக்கு எதிரில் நீண்ட பற்களையுடைய ஒருவன் உட்கார்ந் திருந்தான். அவனுக்கு நீண்ட பற்கள் மாத்திரம் அல்ல; ஒவ்வொரு பல் இருக்க வேண்டிய இடத்திலும் இரண்டு பற்களும், சில இடங்களில் மும்மூன்று பற்களும் முளைத்திருந்தன. டாக்டர் அவனையே வைத்த கண்கள் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தார்.

கிழவிகள் மூன்று பேரும் ஒரே இருக்கையில் உட்கார்ந்துகொண்டி ருந்தார்கள். அதில் ஒரு கிழவி மட்டும் தூங்கிக்கொண்டிருந்தாள். தன் பொக்கைவாய் நிறைய கருப்பட்டிப் புகையிலையைக் குதப்பிக் கொண்டு ஒரு கண்ணை மூடியும் இன்னொரு கண்ணைப் பாதி மூடியும் தூங்கிக்கொண்டிருந்தாள். அவளது வாய்க்கோடியில் புகையிலை எச்சில் ததும்பி நின்று கீழே உதிர முகூர்த்தம் பார்த்துக் கொண்டிருந்தது. பக்கத்தில் இருந்த கிழவி அவளை முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். அது விழுந்தால் தன்மீதுதான் விழும் என்ற பயம் அவளுக்கு. பஸ் புறப்பட இன்னும் சில நிமிஷங்களே இருந்தன. மரங்களில் இலைகூட அசையவில்லை.

பிரயாணிகள் முணுமுணுத்தார்கள். கொட்டாவி விட்டார்கள். தங்களையே நொந்துகொண்டார்கள். சில பிரயாணிகள் தைரியமாகக் கண்டக்டரையும் டிரைவரையும் பஸ் கம்பெனியையும் வாய்விட்டுச் சபித்தார்கள்.

மரத்தின் நிழலடியில் கண்டக்டர்களும் டிரைவர்களும் ஏதோ ஒரு விவகாரத்தில் உற்சாகமாக ஈடுபட்டிருந்தனர். ரோடுவழியாக, ஒரு வாத்தியார் இந்த வேனாவெயிலில் சின்னஞ்சிறு குழந்தைகள் பலரை வரிசைப்படுத்தி அழைத்துக்கொண்டு போனார். ஒருவேளை அவர்கள் உல்லாசப் பிரயாணம் போகிறார்களோ என்னவோ?

மூட்டை தூக்கிப் பிழைக்கும் கூலிச் சிறுவர்கள் ஒருவரோடு ஒருவர் ஆபாசமாகப் பேசிக்கொண்டும் வைதுகொண்டும் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

பஸ் புறப்படும் நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது. இரண்டு பிரயாணிகள் பஸ்ஸினுள் நின்றுகொண்டிருந்தனர். தாங்கள் எங்கே உட்காருவது என்று அவர்களுக்குத் தெரியவில்லை.

ஒரு வழியாக வந்துசேர்ந்தார் கண்டக்டர். கடவுளைக் கண்டது போலிருந்தது; சிலர் கொலைப் பார்வை பார்த்தனர் கண்டக்டரை.

நின்று கொண்டிருந்த அந்த இரண்டுபேரையும், "இறங்குவேய்!" என்றார் கண்டக்டர். மன்னன் பேச்சுக்கு மறுபேச்சு உண்டா? அவர்கள் இறங்குவதைப் பார்க்கப் பரிதாபகரமாக இருந்தது. இறங்கிய வர்களைப் பார்த்துக் கண்டக்டர், "ஏறுவேய்" என்றார்! அவர்கள் மறுபடியும் ஏறிக்கொண்டார்கள். கண்டக்டர் முகத்தில் இன்னும் திருப்தி ஏற்படவில்லை. கடுகடுப்பு மறைந்தபாடில்லை. அப்புறம் அவர் பிரயாணிகளை ஒழுங்குபடுத்தி 'அடுக்கினார்'. அடுக்கியதை எல்லாம் எண்ணினார்; திரும்பவும் எண்ணிவிட்டு டிரைவரை நோக்கிக் குரல் கொடுத்தார். "சீட் நாப்பத்தி அஞ்சி; நம்பர் எளநூத்தி நாப்பத்தி ரெண்டு. ஆலம்பட்டி ஒரு இறக்கம். ரைட்..."

ஆலம்பட்டி இறக்கத்தில் பஸ் வந்து ஓர் அசைப்பு அசைந்து நின்றது. தூங்கிக்கொண்டிருந்த பிரயாணிகள் எல்லோரும் தங்கள்

தலைகளை உடம்போடு ஓர் அசைப்பு அசைத்து மெதுவாகக் கண்களைத் திறந்தும் திறக்க இஷ்டப்படாமலும் இருந்தார்கள்.

மூன்றாவது கிழவி மெதுவாக எழுந்து பனைநார்ப் பெட்டியில் இருந்த தன் சாமான்களோடு இறங்கினாள்.

இந்தச் சமயம் மென்மையான குளிர்ந்த காற்று பஸ்ஸினுள் ஊடுருவிப் புகுந்து பிரயாணிகளைத் தடவிச் சென்றது; ஏறக்குறைய அதேசமயம் யௌவனம் மிகுந்த பெண்ணின் கலகலவென்ற சிரிப்பொலி எல்லோர் காதுகளிலும் புகுந்தது; அதை ஒட்டி மருக் கொழுந்தின் வாடையும் கம்மென்று பரவியது.

கிராமப் பெண்ணொருத்தி, இடுப்பில் குழந்தையுடன் உள்ளே வந்தாள்.

போலீஸ்காரரைக் கண்டதும் அந்தக் குழந்தை சிரித்தான். போலீஸ்காரர் விழித்துப் பார்த்தார். அவர் முகத்தில் இருந்த கோணல் மறைந்து குதூகலம் படர ஆரம்பித்தது.

சுருட்டை முடியும் மழுமழுவென்ற பால் கன்னங்களும் கருவண்டு போன்ற கண்களும், சிரித்த செந்தாமரைபோன்ற முகமும்கொண்டு தன் அழகான கழுத்தைத் திருப்பி எல்லோரையும் சுற்றிப் பார்த்தான் குழந்தை. மென்மையான குளிர்ந்த காற்று பஸ்ஸினுள் ஊடுருவிப் புகுந்து சென்றது. குழந்தை ஆனந்தமாகக் கைதட்டிச் சிரித்தான். பஸ்ஸினுள் மூதேவிக் களை விலகி லட்சுமிகரம் வழிய ஆரம்பித்து விட்டது. பிரயாணிகள் எல்லோருக்கும் குழந்தையையும் தாயையும் பார்த்ததில் ஒரே உற்சாகம், சொர்க்கத்தையே தன் கையில் ஏந்தி நின்ற இந்தப் பெண்மணியை எல்லாருக்கும் சிரம் தாழ்த்தி வணங்க வேண்டும்போல் இருந்தது.

ஒரு கிழவி குழந்தையை, 'வா ராசா' என்றாள்.

இன்னொரு கிழவி "என் செல்லக் கனியில்லே" என்று அழைத்தாள்.

குழந்தை சிரித்தபடியே தலையை ஆட்டி ஆட்சேபம் தெரிவித்தது.

டிக்கெட் கிழித்து கண்டக்டர் அந்தக் குழந்தையிடம் கொண்டு வந்து கொடுத்தார். அதை வாங்கி ஜன்னல் வழியே காற்றோடு விட்டது குழந்தை

கண்டக்டர் பிரமிப்புத் தட்டியதுபோல் நடித்தார். மீண்டும் அந்தப் பெண் கலகலவென்று சிரித்தாள். என்ன அற்புதமான சிரிப்பு!

"போக்கிரிப் பயலே!" என்று போலீஸ்காரர் கொஞ்சினார்.

பஸ் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. கிழவிகள் இருவரும் அந்தப் பெண்ணோடு பேசிக்கொண்டே வந்தார்கள். மலர்ந்த முகத்தோடு அந்தப்பெண் பதில் சொல்லிக்கொண்டே வந்தாள்.

பல் டாக்டரும் அந்தப் பெண்ணின் சிரித்த முகத்தையே பார்த்துக் கொண்டு வந்தார்.

என்ன அழகான பற்கள்! என்ன ஆரோக்கியமான பிரகாசம் பொருந்திய பற்கள்! இப்படிப் பற்களைப் பார்த்து எத்தனை நாள் ஆகின்றன?

அந்த டாக்டருக்கு தாம் பிறந்த பூமியின் ஞாபகங்கள் ஒன்றன்பின்

ஒன்றாய் வந்தன. அவருடைய முகத்தின் பழைய அழகு வந்து குடி புகுந்தது.

நாலாவது மைலில் வந்து பஸ் நின்றது. பெண்ணும் குழந்தையும் இறங்கினார்கள். கிழவிகள் இருவரும் குழந்தையின் கன்னத்தைத் தடவி, தடவிய தங்கள் கையை முத்தமிட்டார்கள்.

"போயிட்டு வாடா கண்ணு"

எல்லாருமே மானசிகமாக அவர்களுக்குப் பிரியாவிடை கொடுத்து அனுப்பினார்கள்.

பஸ் மெதுவாக, சகிக்கமுடியாத பெருத்த இரைச்சலுடன் நகர்ந்தது.

தடியான ஆசாமி சோம்பல் முறித்து எரிச்சலுடன் பெரிய நீண்ட கொட்டாவி ஒன்றை விட்டார். மீண்டும் அவருக்கு இளப்பு ஆரம்பமாகிவிட்டது. அவரைத் தொடர்ந்து இன்னொருவர் துணைக் கொட்டாவி விட்டார். போலீஸ்காரரும் அந்தக் கிழவியும் தூங்க ஆரம்பித்தார்கள்.

டாக்டர் தம் எதிரே உட்கார்ந்து கொண்டிருந்தவனைப் பார்த்துக்கொண்டே இருந்தார். அவர் முகத்தில் கொஞ்சங் கொஞ்ச மாக அருவருப்பு வளர்ந்துகொண்டே வந்தது. "உஸ்! அப்பப்பா! என்ன வேக்காடு, என்ன வேக்காடு, கொஞ்சம் தள்ளி உட்காரும், ஐயா! எத்தனை தடவை சொல்லுவது?"

கண்டக்டர் அவர்களை நோக்கிக் கையை நீட்டி ஏதோ கோப மாகக் கத்தினார். பஸ்ஸின் ஹாரன் சப்தத்தில் அது ஒருவர் காதிலும் விழவில்லை.

♦

**கலைமகள்**
**ஜனவரி 1960**